[29th October 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The remarks of the Inspector of Municipal Councils and Local Boards are awaited.

SRI N. MARUDACHALAM : ஸார், வரி வசூல் செய்யும் பில் கலெக்டர்களுக்கு அதிகப்படி சம்பளம் கொடுக்க முனிசிபாலிடி அங்கீகாரம் செய்து அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறது. அரசாங்கம் கொடுக்கவேண்டுமென்று முனிஸிபாலிட்டிக்கு உத்திரவு போடு வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்ஸ்பெக்டர் ஆப் முனிஸிபல் கவுன்ஸில்ஸ் அண்டு லோகல் போர்ட்ஸ் அவர்களுடைய குறிப்புக்கு அனுப்பியிருக்கிறோம். அவரிடத்திலிருந்து ரிப்போர்ட் வர வில்லை. வந்ததும் கவனிக்கப்படும்.

*Elementary School for Sankarapuram*

* 699 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the local parish priest of Sankarapuram residing at Silukkavarapatty, Malayagoundampatti (P.O.) in Nilakottai taluk, Madurai district, applied for permission two years ago to start an eelmentary school at Sankarapuram;

(*b*) the reasons for not granting him permission; and

(*c*) whether the Madurai District Board has now been directed to start a single teacher school at Sankarapuram?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) The question was under correspondence with the District Educational Officer, Divisional Inspector and the District Board. In the meantime the Government adopted a " go slow " policy in respect of opening of elementary schools by private agencies. In this connection attention of the Member is invited to the answer given in respect of the question No. 337 answered on 19th September 1958 on the floor of the House. Now the district Board has opened an elementary school under the expansion scheme sponsored by the Government of India.

SRI S. LAZAR : அரசியல் அமைப்பு 30-வது ஆர்டிகிளின்படி, இதுமாதிரி விண்ணப்பங்கள் வருகிறபொழுது, அவர்களுக்கு ஆதரவு கொடுக்கவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருப்பது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்திருக்கிறதா ? மைனாரிட்டிகள் வசிக்கும் இடங்களுக்கு இனிமேலாவது அனுமதி கொடுக்க சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே அரசியல் சட்ட விதி குறுக்கிடுவதாக எனக்குத் தெரியவில்லை. ஏனென்றால் சர்க்காருடைய உதவியைப் பெறுவதற்காகத்தான் அவர்கள் " ரிகக்னிஷன் " கேட் கிறார்கள். யார் வேண்டுமானாலும் உதவியே இல்லாமல் நடத்து வதற்குக் குறுக்கே நிற்கவில்லை. தனியார் நடத்துகிற ஸ்கூல்களிலே பாட திட்டங்களை முறைப்படுத்துவதற்குச் சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது. இதிலே அரசியலமைப்புச் சட்டம் குறுக்கிடுவதாகத் தெரியவில்லை.

29th October 1958]

SRIMATHI T. N. ANANDANAYAKI : அரசாங்கம் நடத்துகிற ஆரம்பப் பள்ளிகளைக் காட்டிலும், பாதிரிமார்கள் நடத்துகிற ஆரம்பப் பள்ளிகளில். குழந்தைகளுக்கு மிகவும் திறமையோடு பாடம் சொல்லிக் கொடுக்கிறார்கள், ஆகவே, "go-slow policy" யானது தனிப் பட்டவர்கள் நடத்தும் பள்ளிகளைப் பாதிக்கும் என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் உணர்ந்து, கொள்கையை மாற்றிக்கொள்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிகளில் நல்ல பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன. மோசமான பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன. அதே மாதிரி அரசாங்கம் நடத்துகிற பள்ளிக்கூடங்களிலும் சில நன்றாக நடக்கின்றன, சில மோசமாக நடக்கின்றன. இதையெல்லாம் திருத்தவேண்டுமென்பதுதான் சர்க்காருடைய நோக்கம். தனிப்பட்டவர்கள்தான் நன்றாக நடத்த முடியுமென்று நினைப்பது தவறு.

SRI A. VEDARATHNAM : டாக்டர் அழகப்பச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடந்த கமிட்டியில், இந்த உதவி பெறும் தனியார் ஆரம்பப் பள்ளிகள் சரிவர நடைபெறவில்லை. ஆகவே அவைகளுக்கு ஆக்கம் அளிக்கக்கூடாது என்று சிபாரிசு செய்திருக்கிறார்களா ? அதைப்பற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த அறிக்கையில் அவ்வாறுதான் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை ஸ்ரீமதி அநந்தநாயகி படித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். (சிரிப்பு.) அதன் காரணமாக, முழுப் பிரச்னையும் அரசாங்கத்தில் பரிசீலனையில் இருக்கிறது. அதாவது, எந்த முறையில் தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூடங்கள் நடத்துவதைப்பற்றி எந்தவிதமான முறைகளைக் கையாளவேண்டுமென்று முடிவு செய்வதற்காக இது பரிசீலனையிலிருக்கிறது.

SRI K. VINAYAKAM : Sir, till the ban on opening of new schools by private agencies could be lifted after a decision in the matter is taken by the Government, will the Government consider the possibility of allowing private agencies to run such schools if they do not come to Government for teaching aid and also recognise such schools if they are run efficiently?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is also a matter for consideration, Sir.

*Building works*

* 700 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the names of building works executed by the Public Works Department and the amount spent without first preparing the estimates therefor in 1957–58; and

(*b*) the reasons for executing these works without first preparing the estimates?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) The attention of the Member is invited to the Paper [a] laid on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : மதிப்பீடு தயாரிக்காமல் போலீஸ்காரர்களுக்காகக் கட்டிடங்களும், எஞ்சினியரிங் கல்லூரிக்காக லேபொரட்டரியும் கட்டப்பட்டிருக்கின்றன. இவைகள் எதிர்பார்க்கப்பட்ட

---

[a] Printed as Appendix VIII on page 96 infra.